20980

OL/2021(2022)/60/T-I, II





**60 T I, II**

**අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)**
**கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)**
**General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)**

| | | |
|---|---|---|
| ව්‍යාපාර හා ගිණුම්කරණ අධ්‍යයනය | I, II | පැය තුනයි |
| **வணிகக் கல்வியும் கணக்கீடும்** | **I, II** | மூன்று மணித்தியாலம் |
| Business and Accounting Studies | I, II | *Three hours* |

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
**மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்**
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

## வணிகக் கல்வியும் கணக்கீடும் I

**அறிவுறுத்தல்கள் :**

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* **1** தொடக்கம் **40** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
* **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள ஏனைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

• பின்வரும் சம்பவக் கற்கையை அடிப்படையாகக் கொண்டு **1** தொடக்கம் **5** வரையுள்ள வினாக்களுக்கு விடை தருக.

'டெங்கு நோயைத் தடுத்தல்' தொடர்பான விழிப்புணர்வு கல்வி நிகழ்ச்சித்திட்டம் ஒன்று தும்பறை பிரதேச வைத்தியசாலை, தும்பறை பொலிஸ் நிலையம், சிக்கன கடனுதவி கூட்டுறவுச் சங்கம் ஆகியவற்றின் ஆளணியினர் மற்றும் கெமுனு இறப்பர் தயாரிப்புக்கள் வணிகத்தின் உரிமையாளர் கெமுனு, அதன் ஊழியர்களின் நிதி அனுசரணையுடன் தும்பறை மகா வித்தியாலயத்தில் நடாத்தப்பட்டது. இந்நிகழ்ச்சியில் தும்பறை மகா வித்தியாலயம், மடலந்தை மகா வித்தியாலயம் என்பவற்றின் மாணவர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்கள் ஆகியோர் பங்குபற்றினர்.

**1.** மேலே தரப்பட்டுள்ள சம்பவக் கற்கையில் 'டெங்கு நோயைத் தடுத்தல்' தொடர்பாக நடாத்தப்பட்ட விழிப்புணர்வு கல்வி நிகழ்ச்சித்திட்டத்தின் மூலம் பூர்த்திசெய்யப்பட்ட மனிதத் தேவை யாது?
(1) சுகாதாரம் (2) கல்வி (3) பாதுகாப்பு (4) பொழுதுபோக்கு

**2.** தும்பறை மகா வித்தியாலய அகச்சூழல் காரணிக்கான உதாரணமாக அமைவது
(1) தும்பறை மகா வித்தியாலய மாணவர்களும் ஆசிரியர்களும்
(2) தும்பறை மகா வித்தியாலய மாணவர்களும் பெற்றோர்களும்
(3) மடலந்தை மகா வித்தியாலய மாணவர்களும் ஆசிரியர்களும்
(4) மடலந்தை மகா வித்தியாலய ஆசிரியர்களும் பெற்றோர்களும்

**3.** மேலே தரப்பட்டுள்ள சம்பவக் கற்கையில் உள்ளடங்கியுள்ள தனியார்துறை வணிக நிறுவனமாவது
(1) தும்பறை பிரதேச வைத்தியசாலை (2) சிக்கன கடனுதவி கூட்டுறவுச் சங்கம்
(3) தும்பறை மகா வித்தியாலயம் (4) தும்பறை பொலிஸ் நிலையம்

**4.** தும்பறை பிரதேச வைத்தியசாலை என்பது,
(1) மருந்துப் பொருட்களை உற்பத்தி செய்யும் வணிகம் ஆகும்.
(2) இலாப நோக்குடைய வணிகம் ஆகும்.
(3) சேவைகளை வழங்கும் வணிகம் ஆகும்.
(4) தனியார்துறை வணிகம் ஆகும்.

**5.** கெமுனு இறப்பர் தயாரிப்புகள் வணிக 'முயற்சியாண்மையின்' உற்பத்திக் காரணிக்கான உதாரணமாகக் குறிப்பிடப்பட்டுள்ள விடையைத் தெரிவு செய்க.
(1) தயாரிப்புகளுக்காக பயன்படுத்தப்படும் இறப்பர் (2) வணிகத்தில் ஈடுபடுத்தப்பட்டுள்ள பணம்
(3) வணிகத்தின் உடைமையாளரான கெமுனு (4) வணிகத்தின் ஊழியர்கள்

[பக். 2 ஐப் பார்க்க

14. விற்பனை முகாமையாளர் ஒருவரால் 2021 ஆம் ஆண்டிற்கான விற்பனையை மதிப்பீடு செய்தலானது முகாமைத்துவச் செயன்முறையின் ......①...... கருமமாகவும் 2022 ஆம் ஆண்டில் 5% கழிவுடன் பொருட்களை விற்பனை செய்தலானது சந்தைப்படுத்தற் கலவையின் ......②...... ஆகவும் காணப்படுகின்றது.
மேலே தரப்பட்ட கூற்றில் ① ஆம் ② ஆம் இடைவெளிகளில் வரக்கூடிய சரியான சொற்களை முறையே எடுத்துக்காட்டும் விடையைத் தெரிவு செய்க.
(1) கட்டுப்படுத்தல், மேம்படுத்தல் (2) திட்டமிடல், விலை
(3) திட்டமிடல், மேம்படுத்தல் (4) கட்டுப்படுத்தல், விலை

15. ரங்கன் என்பவர் தான் உழைத்த ரூ. 250 000 தொகையை வரையறுத்த பொதுக் கம்பனி ஒன்றின் சாதாரண பங்குகளில் முதலீடு செய்தார். 2021 ஆம் ஆண்டில் அக்கம்பனி உழைத்த இலாபத்தில் இருந்து ரூ. 10 000 ஐ அவர் பெற்றுக்கொண்டார். அதன் பின்னர், அவர் தனது எல்லாப் பங்குகளையும் ரூ. 350 000 இற்கு விற்பனை செய்தார். இம்முதலீட்டிலிருந்து ரங்கன் உழைத்த திரும்பலைக் குறிப்பிடும் சரியான சொற்களை எடுத்துக்காட்டும் விடையைத் தெரிவுசெய்க.
(1) வட்டி வருமானம், பங்கிலாபங்கள் (2) பங்கிலாபங்கள், மூலதன ஆதாயங்கள்
(3) இலாபம், மூலதன ஆதாயங்கள் (4) மூலதன ஆதாயங்கள், வட்டி வருமானம்

16. நிலையான திரும்பல் வீதத்தைக் **கொண்டிராத** முதலீட்டு மூலம் யாது?
(1) நிலையான வைப்பு (2) திறைசேரி உண்டியல்கள்
(3) சேமிப்புக் கணக்கு (4) சாதாரண பங்குகள்

17. இரட்டைப் பதிவுத் தத்துவத்தின்படி வரவுப் பக்கத்தில் குறைவும் செலவுப் பக்கத்தில் அதிகரிப்பும் பதியப்படும் கணக்குகளை மட்டும் உள்ளடக்கியுள்ள விடையைத் தெரிவு செய்க.
(1) கடன்கொடுத்தோர் கணக்கு, பற்றுக்கள் கணக்கு, விற்பனைகள் கணக்கு, காப்புறுதிக் கட்டணக் கணக்கு
(2) வங்கிக் கடன் கணக்கு, கடன்கொடுத்தோர் கணக்கு, கொடுத்த கழிவுக் கணக்கு, தரகு வருமானக் கணக்கு
(3) கூலிகள் கணக்கு, கடன்பட்டோர் கணக்கு, சம்பளங்கள் கணக்கு, காசுக் கணக்கு
(4) மூலதனக் கணக்கு, கடன்கொடுத்தோர் கணக்கு, வங்கிக் கடன் கணக்கு, பெற்ற கழிவுக் கணக்கு

18. தளபாடங்களை உற்பத்தி செய்யும் வணிகம் ஒன்றின் நடைமுறையல்லாச் சொத்து
(1) வருமதியான கட்டட வாடகை (2) விற்பனைக்கான தளபாடங்கள்
(3) தச்சுத் தொழிலாளிக்கான மேசை (4) கையில் உள்ள காசு

● பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி **19** தொடக்கம் **21** வரையுள்ள வினாக்களுக்கு விடை தருக.

வணிகம் ஒன்றில் இடம்பெற்ற கொடுக்கல்வாங்கல்கள் சில கீழே தரப்பட்டுள்ளன.

A – ரூ. 25 000 பெறுமதியான பொருட்களை காசுக்குக் கொள்வனவு செய்தல்
B – ரூ. 10 000 இற்கு வாங்கிய பொருட்களை ரூ. 12 000 இற்கு கடனுக்கு விற்பனை செய்தல்
C – கடன்பட்டோர் ஒருவரிடமிருந்து ரூ. 5 000 பெற்றுக் கொள்ளுதல்
D – வணிக அலுவலகத்துக்காக ரூ. 50 000 பெறுமதியான மேசை ஒன்றை கடனுக்குக் கொள்வனவு செய்தல்

19. மேலே தரப்பட்டுள்ள கொடுக்கல்வாங்கல்களில், இந்த வணிகத்தின் கணக்கீட்டுச் சமன்பாட்டின் உரிமையாண்மையில் தாக்கத்தை ஏற்படுத்தும் கொடுக்கல்வாங்கலானது,
(1) A ஆகும். (2) B ஆகும். (3) C ஆகும். (4) D ஆகும்.

20. மேலே தரப்பட்டுள்ள கொடுக்கல்வாங்கல்களின் பின்னர், இவ்வணிகத்தின் கணக்கீட்டுச் சமன்பாட்டின் சொத்தின் பெறுமதியானது,
(1) ரூ. 15 000 ஆல் அதிகரிக்கும். (2) ரூ. 17 000 ஆல் அதிகரிக்கும்.
(3) ரூ. 52 000 ஆல் அதிகரிக்கும். (4) ரூ. 92 000 ஆல் அதிகரிக்கும்.

21. மேலே தரப்பட்டுள்ள கொடுக்கல்வாங்கல்களுக்கு முன்னர், வணிகத்தின் மொத்தப் பொறுப்புக்கள் ரூ. 80 000 ஆயின், இக்கொடுக்கல்வாங்கல்களின் பின்னர் மொத்தப் பொறுப்புக்களின் பெறுமதி யாது?
(1) ரூ. 75 000 (2) ரூ. 90 000 (3) ரூ. 130 000 (4) ரூ. 142 000

[பக். 4 ஐப் பார்க்க

**29.** வணிகத்தின் தொலைபேசிக் கட்டணங்கள் ரூ. 9000 செலுத்தப்பட்டபோதும் தொலைபேசிக் கட்டணக் கணக்கில் ரூ. 900 என வரவு வைக்கப்பட்டது. இவ்வழுவைத் திருத்துவதற்குப் பொருத்தமான நாட்குறிப்புப் பதிவைத் தெரிவுசெய்க.

| | | | |
|---|---|---|---|
| (1) | தொலைபேசிக் கட்டணக் கணக்கு வரவு | ரூ. 8 100 | |
| | காசுக் கணக்கு | | ரூ. 8 100 |
| (2) | தொலைபேசிக் கட்டணக் கணக்கு வரவு | ரூ.8 100 | |
| | தொங்கல் கணக்கு | | ரூ. 8 100 |
| (3) | தொலைபேசிக் கட்டணக் கணக்கு வரவு | ரூ.9 000 | |
| | தொங்கல் கணக்கு | | ரூ. 9 000 |
| (4) | தொலைபேசிக் கட்டணக் கணக்கு வரவு | ரூ. 9 000 | |
| | காசுக் கணக்கு | | ரூ. 9 000 |

**30.** சமீம் விளையாட்டுக் கழகமானது 100 அங்கத்தவர்களைக் கொண்டுள்ளதுடன் ஒவ்வொரு அங்கத்தவருக்குமான மாதாந்த அங்கத்துவக் கட்டணம் ரூ. 50 ஆகும். 31.12.2021 இல் முடிவடைந்த வருடத்துக்காக 70 அங்கத்தவர்களது வருடாந்த அங்கத்துவக் கட்டணம் பெறப்பட்டிருந்தது. 31.12.2021 இல் முடிவடைந்த வருடத்துக்கான வருமானக் கூற்றில் காட்டப்பட வேண்டிய அங்கத்துவக் கட்டணம்

(1) ரூ. 3 500 (2) ரூ. 5 000 (3) ரூ. 42 000 (4) ரூ. 60 000

● பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி **31, 32** ஆகிய வினாக்களுக்கு விடை தருக.

பின்வரும் செலவுகள் கேக் தயாரிக்கும் வெதுப்பகம் ஒன்றின் 31.03.2022 இல் முடிவடைந்த மாதத்துக்கு உரியனவாகும். இங்கு இம்மாதத்தில் 1000 கிலோகிராம் கேக் தயாரிக்கப்பட்டது.

| | ரூ. |
|---|---|
| கோதுமை மாவு .......... | 100 000 |
| முட்டைகள் .......... | 10 000 |
| ஏனைய பொருட்கள் .......... | 20 000 |
| கேக் தயாரிப்பவர் கூலி .......... | 45 000 |
| வெதுப்பக வாடகை (மாதாந்தம்) .......... | 10 000 |
| வெதுப்பக மின்சாரக் கட்டணம் (மாதாந்தம்) .......... | 15 000 |

**31.** 31.03.2022 இல் முடிவடைந்த மாதத்தில் கேக் உற்பத்திக்கான மூலக் கிரயம்

(1) ரூ. 145 000 (2) ரூ. 155 000 (3) ரூ. 175 000 (4) ரூ. 200 000

**32.** 10% இலாப எல்லையில் ஒரு கிலோகிராம் கேக்கின் விற்பனை விலை யாது?

(1) ரூ. 143.00 (2) ரூ. 192.50 (3) ரூ. 200.00 (4) ரூ. 220.00

● பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி **33, 34** ஆகிய வினாக்களுக்கு விடை தருக.

சுலோச்சனா என்பவரின் வணிகமானது மாதாந்தம் ரூ. 10 000 வாடகைக்கு அமர்த்தப்பட்ட கட்டடத்தில் நடாத்தப்படுகின்றது. 31.12.2021 இல் முடிவடைந்த வருடத்துக்காக இக்கட்டடத்துக்கான வாடகையாக ரூ. 80 000 செலுத்தப்பட்டுள்ளது.

**33.** 31.12.2021 இல் முடிவடைந்த வருடத்துக்கான சுலோச்சனா வணிகத்தின் இக்கட்டட வாடகை தொடர்பான செம்மையாக்கலுக்குப் பொருத்தமான நாட்குறிப்புப் பதிவைத் தெரிவுசெய்க.

| | | | |
|---|---|---|---|
| (1) | கட்டட வாடகைக் கணக்கு வரவு | ரூ. 40 000 | |
| | கட்டட வாடகை சென்மதிக் கணக்கு | | ரூ. 40 000 |
| (2) | கட்டட வாடகை வருமதிக் கணக்கு வரவு | ரூ. 40 000 | |
| | கட்டட வாடகை வருமானக் கணக்கு | | ரூ. 40 000 |
| (3) | கட்டட வாடகைக் கணக்கு வரவு | ரூ. 80 000 | |
| | காசுக் கணக்கு | | ரூ. 80 000 |
| (4) | கட்டட வாடகைக் கணக்கு வரவு | ரூ. 120 000 | |
| | கட்டட வாடகை சென்மதிக் கணக்கு | | ரூ.120 000 |

[பக். 6 ஐப் பார்க்க

**60 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
**General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)**

ව්‍යාපාර හා ගිණුම්කරණ අධ්‍යයනය I, II
**வணிகக் கல்வியும் கணக்கீடும் I, II**
Business and Accounting Studies I, II

## வணிகக் கல்வியும் கணக்கீடும் II

**அறிவுறுத்தல்கள் :**

* **முதலாம்** வினா உட்பட பகுதி **I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் தெரிவுசெய்து எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.
* அறிவுறுத்தல்களுக்கமைய **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக. மேலதிகமாக எழுதப்படும் விடைகள் பரீட்சார்த்தியினால் வெட்டிவிடப்படாத சந்தர்ப்பங்களில் பரீட்சகரினால் புள்ளிகள் வழங்கப்படாமலேயே வெட்டிவிடப்படும்.

**1.** பின்வரும் சம்பவக் கற்கையைப் பயன்படுத்தி (i) தொடக்கம் (x) வரையுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

சுற்றுலாத்துறையின் சொர்க்கமாகக் கருதப்படும் கொக்கலயில் வசிக்கும் தீபன் என்பவர் ஒரு முகாமைத்துவப் பட்டதாரியாகவும், நேர்ப்பாங்காகச் சிந்திப்பவராகவும், இடரை ஏற்றுக்கொள்ள விரும்புபவராகவும் காணப்படுகின்றார். இவர் உள்ளூர் மற்றும் வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளுக்கு கொக்கல ஏரிக்குக் குறுக்காக மடோல்துவவிற்குச் செல்வதற்கான படகுச் சேவை வணிகம் ஒன்றை 'ஏரிக்கரை சவாரி' எனும் பெயரில் 01.01. 2022 இல் தனது சொந்தப் பணமான ரூ. 800 000 ஐயும், 12% வருடாந்த வட்டியில் ரூ. 500 000 வங்கிக் கடனையும் முதலீடு செய்து ஆரம்பித்தார். அதே நாளில் சவாரிக்கான படகு ஒன்றை ரூ. 800 000 இற்கும், பாதுகாப்பு மேலங்கிகளை ரூ. 120 000 இற்கும் காசுக்குக் கொள்வனவு செய்ததுடன் படகைச் செலுத்துவதில் அனுபவம் வாய்ந்த திலகன் என்பவரை மாதாந்தச் சம்பளம் ரூ. 35 000 இற்கும் பயிற்சி பெறாத ஊழியரான குமரன் என்பவரை மாதாந்தச் சம்பளம் ரூ. 10 000 இற்கும் ஆட்சேர்ப்புச் செய்தார். அதே நாளில் மடோல்துவவிற்கு அருகில் சுற்றுலா பங்களாக்கள் கூடுதலாகக் காணப்படும் இடத்தில் வணிக நிறுவனத்துக்கான கட்டடம் ஒன்றை மாதாந்தம் ரூ. 7 000 இற்கு வாடகைக்குப் பெற்றுக்கொண்டார்.

பின்வருவன 31.01.2022 இல் முடிவடைந்த மாதத்தில் நிகழ்ந்த கொடுக்கல்வாங்கல்கள் ஆகும்.

| | ரூ. |
|---|---|
| • செலுத்திய எரிபொருட் செலவுகள் | 85 000 |
| • செலுத்திய காப்புறுதிக் கட்டணங்கள் | 8 000 |
| • செலுத்திய தரிப்பிடக் கட்டணங்கள் | 15 000 |
| • செலுத்திய ஏனைய செலவுகள் | 20 000 |
| • பெற்றுக்கொண்ட மொத்த படகுச்சேவை வருமானம் | 310 000 |

ஜனவரி மாதத்தில் வணிகத்தின் வருமானம் மற்றும் செலவுகளை பகுப்பாய்வு செய்ததன் பின்னர் பெப்ரவரி மாதத்தில் இருந்து மேலும் இரண்டு சவாரிப் படகுகளை கடனுக்குக் கொள்வனவு செய்வதன் மூலம் வணிகத்தை விரிவுபடுத்த தீபன் தீர்மானித்தார்.

**மேலதிக தகவல்கள் :**

* சவாரிப் படகுகள் 12% இலும், பாதுகாப்பு மேலங்கிகள் 50% இலும் வருடாந்தம் பெறுமானத்தேய்வு செய்யப்படல் வேண்டும்.
* ஜனவரி மாத மின்சாரக் கட்டணம் ரூ. 1 000 ஆகும். இது 31.01.2022 வரை செலுத்தப்படவில்லை.
* படகைச் செலுத்துபவரினதும் பயிற்சி பெறாத ஊழியரினதும் ஜனவரி மாதத்துக்கான சம்பளங்கள் இம்மாதத்துக்குள் செலுத்தப்பட்டிருந்தபோதும் 31.01.2022 இல் கட்டட வாடகை செலுத்தப்படவில்லை.

(i) (அ) 'ஏரிக்கரை சவாரி' வணிகத்தின் மூலம் பூர்த்தி செய்யப்படும் மனிதத் தேவை யாது?

(ஆ) வணிகத்தின் உடைமையின்படி 'ஏரிக்கரை சவாரி' வணிகமானது எந்தவகை வணிக நிறுவனத்திற்கு உரித்தானதாகும்?

(ii) பின்வருவன 'ஏரிக்கரை சவாரி' வணிகத்தின் ஐந்து வணிகச் சூழல் காரணிகள் ஆகும்.

(அ) சுற்றுலாத்துறையின் சொர்க்கம் கொக்கல
(ஆ) தீபனின் முகாமைத்துவப் பட்டம்
(இ) அனுபவம் வாய்ந்த படகு செலுத்துனர் திலகன்
(ஈ) பயிற்சிபெறாத ஊழியர் குமரன்
(உ) மடோல்துவவிற்கு அருகாமையில் வணிகக் கட்டடம் அமைந்திருத்தல்

[பக். 8 ஐப் பார்க்க

(iv) ஜனனி என்பவர் நுவரெலியாவில் மலர்களைச் செய்கை பண்ணி, விற்பனை செய்யும் 'சௌந்தர்யா மலர்கள்' என்ற வணிகத்தை வெற்றிகரமாக நடாத்திவருகிறார். அவர் கடந்த வருடம் ஏற்பட்ட பங்கசு நோயொன்று காரணமாக கிராமிய வங்கிக்கான வங்கித் தவணைக் கட்டணத்தைச் செலுத்துவதில் சிக்கலை எதிர்நோக்கினார். ஆனால் அவரது வணிக அறிவு, அர்ப்பணிப்பு மற்றும் சேதனப் பசளையை வழங்கியதன் மூலமான அரசாங்கத்தின் ஊக்குவிப்பு ஆகியவற்றினால் இந்த வருடம் அவர் வெற்றியடைந்தார்.

(அ) மேலே தரப்பட்ட சம்பவக் கற்கையில் குறிப்பிடப்பட்டுள்ள 'சௌந்தர்யா மலர்கள்' வணிகத்தின் **இரண்டு** அக்கறையுடைய பிரிவினரைக் குறிப்பிடுக.

(ஆ) மேலே தரப்பட்ட சம்பவக் கற்கையில் குறிப்பிடப்பட்டுள்ள வணிகத்தின் 'சௌந்தர்யா மலர்கள்' என்ற பெயர் பதிவு செய்யப்பட வேண்டியதற்கான காரணத்தைக் குறிப்பிடுக.

(02 புள்ளிகள்)

**(மொத்தம் 08 புள்ளிகள்)**

3. (i) நடைமுறைக் கணக்கொன்றைப் பேணுவதன் **இரண்டு** அனுகூலங்களை எழுதுக. (02 புள்ளிகள்)

(ii) பின்வரும் கூற்றுகள் **உண்மையா, பொய்யா** என்பதைக் குறிப்பிடுக.

(அ) காசோலை மூலம் கொடுக்கல்வாங்கல் செய்யும்போது குறுக்குக் கோடிடல் கட்டாயமானதாகும்.

(ஆ) இழப்பீடு எனும் காப்புறுதித் தத்துவமானது ஆயுட் காப்புறுதிக்குப் பொருத்தமற்றதாகும்.

(இ) தொடர்பாடல் செயன்முறை ஒன்றில், அனுப்புபவருக்கும் பெறுபவருக்கும் இடையே பரிமாற்றப்படும் செய்தியானது தொடர்பாடல் ஊடகத்தின் மூலம் இணைக்கப்படுகின்றது.

(ஈ) பெரும்பாலும் சென்றடைய வேண்டிய இடம் வரை பயன்படுத்த முடியாமை புகையிரத போக்குவரத்தில் காணப்படும் ஒரு பிரதிகூலமாகும். (02 புள்ளிகள்)

(iii) யாழ்ப்பாணத்தில் இருக்கும் உருளைக்கிழங்கு உற்பத்தியாளரான ராஜன் என்பவர் 50 கிலோகிராம் உருளைக்கிழங்குகளை வெள்ளிக்கிழமை இரவு தபால் புகையிரதத்தின் மூலம் புறக்கோட்டை புகையிரத நிலையத்துக்கு அனுப்புவதாக கொழும்பில் இருக்கும் சிறப்புச் சந்தை உடைமையாளரான பிரபாத் என்பவருக்கு தொலைபேசி ஊடாக அறிவித்தார். பிரபாத், அந்த உருளைக்கிழங்குகளை பொறுப்பேற்பதற்கு உடன்பட்டு, அது பற்றி ராஜனுக்குத் தெரிவித்ததுடன் தனது லொறிச் சாரதியையும் ஊழியரையும் புறக்கோட்டை புகையிரத நிலையத்துக்குச் செல்லுமாறும் அறிவுறுத்தினார்.

(அ) மேலுள்ள சம்பவக் கற்கையில் குறிப்பிடப்பட்டுள்ள தொடர்பாடல் செயன்முறையின் கூறான துலங்கலுக்கான உதாரணமொன்றை எழுதுக.

(ஆ) மேலே தரப்பட்ட சம்பவக் கற்கையில் குறிப்பிடப்பட்டுள்ள சில்லறை வியாபாரி, மொத்த வியாபாரி ஆகியோரின் பெயர்களைத் தனித்தனியாக எழுதுக. (02 புள்ளிகள்)

(iv) ஜெயம் என்பவர் உடற்பயிற்சிக்கான நடைபாதையில் நடந்து செல்லும்போது நிலத்தில் விழுந்து கிடந்த ரூ. 500 000 பெறுமதியான மக்கள் வங்கியின் காசோலை ஒன்றைக் கண்டெடுத்தார். காசோலையின் முன்பக்கத்தில் 'ருவன் பெரேரா' என பெயர் எழுதப்பட்டிருந்ததுடன் 'பெறுவோன் கணக்கு மட்டும், இலங்கை வங்கி' என இரண்டு சமாந்தரக் கோடுகளுக்கிடையே எழுதப்பட்டிருந்தது.

(அ) இக்காசோலைக்கான கட்டளையைப் பெறுபவர் (வரைவுணி), பணம் பெறுபவர் ஆகியோரின் பெயர்களைத் தனித்தனியாக எழுதுக.

(ஆ) எந்தவொரு தரப்பினரும் இக்காசோலைக்கான பணத்தொகையை வங்கிக் கருமபீடத்தில் இருந்து பெற்றுக்கொள்ள முடியாது. இதற்கான காரணம் என்ன?

(02 புள்ளிகள்)

**(மொத்தம் 08 புள்ளிகள்)**

4. (i) சாதாரண பங்குகளில் முதலீடு செய்வதன் மூலம் கிடைக்கும் **இரண்டு** நன்மைகளை எழுதுக. (02 புள்ளிகள்)

(ii) பின்வரும் கூற்றுகள் **உண்மையா, பொய்யா** என்பதைக் குறிப்பிடுக.

(அ) திட்டமிட்ட செயன்முறையொன்றை அமுல்படுத்தும்போது வணிகத்தின் மனித வளங்களைப் பொருத்தமாக நெறிப்படுத்துவதற்கான செயன்முறை வழிநடாத்தல் ஆகும்.

(ஆ) வணிகமானது மிகவும் கவர்ச்சிகரமாகவும் இலாபகரமான வழியிலும் திருப்தி செய்ய முடியுமானதாக இருக்கும் சந்தையின் பங்கு இலக்குச் சந்தை எனப்படும்.

(இ) நபரொருவர் தான் உழைத்த வருமானத்தில் இருந்து சேமித்த குறிப்பிட்ட தொகையை பொருளாதாரத் திரும்பலை எதிர்பார்த்து பயனுறுதியான வழிமுறையில் ஈடுபடுத்துதல் முதலீடு ஆகும்.

(ஈ) அரசாங்கத்தின் சார்பாக வணிக வங்கிகளால் திறைசேரி உண்டியல்கள் வழங்கப்படுகின்றன.

(02 புள்ளிகள்)

(iii) தர்சன் என்பவர் மூன்று ஊழியர்களை ஈடுபடுத்தி, அவர்கள் ஒவ்வொருவரும் நிறைவேற்ற வேண்டிய கடமைகளை அவர்களுக்கு அறிவுறுத்தியுள்ளதுடன் தனது கித்துள் பனங்கட்டித் தயாரிப்புகளை விசேட கழிவுடன் புறக்கோட்டை புகையிரத நிலையத்துக்கு அருகில் விற்பனை செய்கிறார். மேலே தரப்பட்ட சம்பவக் கற்கையைப் பயன்படுத்தி,

(அ) முகாமைத்துவக் கருமம் ஒன்றான வழிநடாத்தலுக்கு உதாரணம் ஒன்று எழுதுக.

(ஆ) சந்தைப்படுத்தல் கலவையின் மாறியான விலைக்கு உதாரணம் ஒன்று எழுதுக. (02 புள்ளிகள்)

[பக். 10 ஐப் பார்க்க

**6.** (i) மூலக் கிரயத்தின் கூறுகளைப் பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) 01.01.2022 இல் நிமலன் என்பவர் கன்வஸ் துணிகளைக் கொண்டு பைகளை உற்பத்தி செய்யும் வணிகமொன்றை ஆரம்பித்ததுடன், அதற்காக ரூ. 120 000 பெறுமதியான இயந்திரங்களையும் கொள்வனவு செய்தார்.
ஜனவரி மாதத்திற்கான உற்பத்திச் செலவுகள் பின்வருமாறு:

| | ரூ. |
|---|---|
| கட்டட வாடகை .................................. | 20 000 |
| தையல்காரர் கூலிகள் .......................... | 60 000 |
| பாதுகாவலர் கூலிகள் .......................... | 25 000 |
| கன்வஸ் துணி கொள்வனவுகள் .............. | 200 000 |
| பைகளுக்கான வடிவமைப்புச் செலவுகள் ...... | 30 000 |
| மின்சாரச் செலவுகள் .......................... | 8 000 |
| இயந்திர திருத்தச் செலவுகள் ................. | 14 000 |
| இயந்திர பெறுமானத்தேய்வுகள் .............. | 3 000 |

ஜனவரி மாத முடிவில் எதுவித கன்வஸ் துணிகளும் இருப்பாகக் காணப்படவில்லை என்பதுடன், கன்வஸ் பை ஒன்றின் கிரயம் ரூ. 1200 ஆகும்.

**வேண்டப்படுவது :**

(அ) ஜனவரி மாதத்திற்கான கன்வஸ் துணிப் பைகளின் உற்பத்திக்கான மூலக் கிரயம்
(ஆ) ஜனவரி மாதத்திற்கான கன்வஸ் துணிப் பைகளின் உற்பத்திக்கான மேந்தலைக் கிரயம்
(02 புள்ளிகள்)

(iii) 31.01.2022 இல் இருந்தவாறு கருணா வணிகத்தின் பரீட்சை மீதி பின்வருமாறு

| | வரவு (ரூ.) | செலவு (ரூ.) |
|---|---|---|
| காசு மீதி ............................ | 110 000 | |
| விற்பனை ............................ | | 540 000 |
| கொள்வனவு ......................... | 300 000 | |
| தொலைபேசிக் கட்டணங்கள்......... | 8 000 | |
| இறை வரி ......................... | 2 000 | |
| மோட்டார் வாகனம் ................. | 250 000 | |
| காணி கட்டடங்கள் ................. | 800 000 | |
| கடன்கொடுத்தோர் ................. | | 60 000 |
| மூலதனம் ............................ | | 900 000 |
| தொங்கல் கணக்கு ................. | 30 000 | |
| | 1 500 000 | 1 500 000 |

மேலே தரப்பட்ட பரீட்சை மீதியைத் தயாரிப்பதில் பின்வரும் கணக்கீட்டு வழுக்கள் இனங்காணப்பட்டன.
(அ) செலுத்தப்பட்ட தொலைபேசிக் கட்டணங்கள் ரூ. 6 000, தொலைபேசிக் கட்டணங்கள் கணக்கில் ரூ. 8 000 எனப் பதியப்பட்டிருந்தது.
(ஆ) கடன்கொடுத்தோருக்குச் செலுத்தப்பட்ட ரூ. 16 000, அக்கடன்கொடுத்தோர் கணக்கில் செலவு வைக்கப்பட்டது.
(இ) கட்டட திருத்தச் செலவுகளுக்காகச் செலுத்தப்பட்ட ரூ. 100 000 கட்டடங்கள் கணக்கில் வரவு வைக்கப்பட்டது.

**வேண்டப்படுவது :**

(அ) மேலே தரப்பட்ட தவறுகளைத் திருத்துவதற்கு முன்னரான தொங்கல் கணக்கு
(ஆ) மேலே தரப்பட்ட தவறுகளைத் திருத்துவதற்கான நாட்குறிப்புப் பதிவுகள் (04 புள்ளிகள்)

(iv) 31.03.2022 இல் இருந்தவாறு கஜன் வணிகத்தின் வங்கிக் கணக்கானது ரூ. 24 000 ஐ சாதகமான மீதியாகக் காட்டியது. எனினும், இத்தினத்தில் பெறப்பட்ட வங்கிக்கூற்று மீதியானது இதிலிருந்து வேறுபட்டிருந்தது. இவ்வித்தியாசத்திற்கான காரணங்களாக பின்வருவன இனங்காணப்பட்டன.

- வங்கியால் கஜனின் நடைமுறைக் கணக்கில் பதியப்படாத காசோலைகள் :
  - வைப்புச் செய்யப்பட்டபோதும் வசூலிக்கப்படாத காசோலைகள் ரூ. 14 000
  - வழங்கப்பட்டபோதும் வங்கியில் சமர்ப்பிக்கப்படாத காசோலைகள் ரூ. 15 000
- கஜன் வணிகத்தின் வங்கிக் கணக்கில் பதியப்படாத கொடுக்கல்வாங்கல்கள் :
  - நிலையியற் கட்டளைகளின் மீது வங்கியால் செலுத்தப்பட்ட கடன் தவணைக் கட்டணம் ரூ. 10 000
  - வங்கியில் கடன்பட்டோர் ஒருவரால் நேரடியாக வைப்புச் செய்யப்பட்ட தொகை ரூ. 30 000

**வேண்டப்படுவது :**

(அ) 31.03.2022 இல் இருந்தவாறு கஜன் வணிகத்தின் வங்கிக்கணக்கு மீதியைச் செம்மையாக்குக.
(ஆ) 31.03.2022 இல் இருந்தவாறு வணிகத்தின் வங்கிக் கணக்கிணக்கக் கூற்றைத் தயாரிக்குக.
(04 புள்ளிகள்)
**(மொத்தம் 12 புள்ளிகள்)**

[பக். 12 ஐப் பார்க்க